துரு.—சிவனடியாராகிய தேவர், முனிவர்கட்கு இடர் விளைத்த சூரனுக்குச் சத்துருவானவ னெனவாம். சூர் - சூரன் என்பதன் விகாரம்.

சூர் என்னும் அச்சந் துன்பமனைத்திற்குஞ் சத்துரு வெனவாம். இஃது ஆண்டலைக்கொடியோ னென்னு நாமார்த்தத்தில் விளக்கிய இலக்ஷியார்த்தத்தைப் பொருந்தும்.

(௩௨)

சீட.—செட்டி என்பதற் கருத்தமென்னை?

துரு.—இவ்வியாசம் ௩௮-வது கடாவிடையிற் சொற்ற உப்பூரி குடிகிழாருக்கு மகனாய் உருத்திரசன்மனெனும் பெயர்தாங்கி வைசிய குலத்திருந்தவன் எனவாம்.

அருளெனும் பொருளை அன்பர்மாட்டளித்துவிருத்தி செய் வருத்தகனாகிய செட்டி யெனவாம். [செட்டு = வியாபாரம். அதனையுடையான் செட்டி.]

(௩௩)

சீட.—செவ்வேள் என்பதற்கருத்தமென்னை?

துரு.—செந்நிறமுடைய விரும்பப்படுபவன் எனவாம். ஆண்மக னெனவுமாமென்பர். வேள்—முருகன், மன் மதன் என இருவரிருத்தலிற் பிரித்துணர்த்துவான் நிறங் கணித்து மன்மதனைக் கருவேளெனக் கழறுவதுபோல நிறங்கணித்து முருகனைச் செவ்வேளெனத் தெரிப்ப தாம். கருவேள் தன்னுருவால் தன்றந்தையுருவுங் கறுப் பெனக் காட்டுவன். செவ்வேள், தன் சோதிச் செவ் வுருவால் தன்றந்தை யுருவுஞ் சோதிச் செவ்வுருவெனக்